# Taṉavaiciya ūḻiyaṉ

# Malar 4, itaḻ 36

# May 27, 1924

Record no. 148

உ

சிவமயம்.

சென்னைப் பதிவு எண் கரு௦௫. தந்தி விலாசம்:—'Oolian'

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்று

செவ்வாய்க்கிழமை தோறும் வெளி வருவது.

ஆசிரியன் :—ராய. சொக்கலிங்கன்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

வைழயும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௪. காரைக்குடி ரக்தாக்ஷி௵ வைகாசி-மீ கச-உ (உஎ—ரு—க௯உச) இதழ் க௯

இவ்வாரம் இரண்டு பக்தர்களைப் பற்றி யெழுத வெடுத்துக் கொண்டோம். அவர்களாவார், கழற்சிங்க நாயனாரும் திருக்கோட்டியூர் நம்பிகளுமாவார். இவருள் முன்னையவர் உமாதவ பக்தர்; பின்னையவர் மாதவ பக்தர். சிங்கர், அரைசரில் வந்துக்ஷத்திரியத்தொழில்பூண்டவர்; நம்பிகள், அந்தணரில் வந்து ஆசாரியத்தொழில் பூண்டவர். கழற்சிங்கர், சிவார்ச்சனைக்கும் சிவாலங்காரத்துக்கும் உரிய புஷ்பத்தை மோந்து துர்விநியோகஞ்செய்த தமது அன்பு மிகுந்த பத்தினியையும் கண்டித்துத் தண்டித்தவர்; திருக்கோட்டியூர் நம்பிகள் விஷ்ணுத்தியானத்துக்கும் விஷ்ணு ஞானத்துக்கும் உரியதான திருமந்திரார்த்த ரஹஸ்யத்தை அநதிகாரிகளாகிய யாவர்க்கும் ஓதித்துர்விநியோகஞ்செய்த—தம்டால் மிக்க பக்தியுடைய— ஆசாரிய சீலரா தமது சிஷ்யரைத்தண்டிக்கப் புகுந்தவர். சிங்கர், குற்றவாளியான தமது மனைவியின் அறியாமையையும் மன்னிப்புக்கேட்டலையும் தெரிந்துங்கூட அது மகாபாதகமாதலால், மன்னிக்காமல், தமதுக்ஷத்திரியத் தன்மையை நிலைநாட்டினவர். நம்பிகள், குற்றவாளியான தமது சீடரது மனக்கருத்தையும் பேரறிவையும் பெருங்கருணையையும் அறிந்து, செய்தது மகாபாதகமாயினும், மன்னித்துத் தமது அந்தணத் தன்மையை நிலைநாட்டியவர். கழற்சிங்கர் திருநாள்! வைகாசி கஅ.ம் நாளிலும் திருக்கோட்டியூர் நம்பிகள் திருநாள் வைகாசி உ௦.ம் நாளிலு வருகின்றன.

## கழற்சிங்கநாயனார்.

டல்லவர் குலத்திற் பிறந்து கழற்சிங்கரென்னுந் திருநாமம் பெற்றுப் பரமசிவனருளாற் பகைவரை வென்று பல சிவஸ்தலங்களைத் தரிசித்துச் சென்று, திருவாரூர் சென்றார். அங்கு, புற்றிடங்கொண்டாரைத் தரிசிக்கட்டோனபோது, அவருடைய மனைவியரில் ஒருத்தி; புஷ்பமண்டபத்திற் கீழே கிடந்துள்ள ஒரு மலரை யெடுத்து மோந்தபோது, அதைக்கண்ட சத்திய நாயனார், பொறாது கத்திகொண்டு அம்மங்கையின் மூக்கையரிந்துவிட்டனர். அது தெரிந்த அரைசர் கழற்சிங்கநாயனார், குற்றவாளியான மனைவியின்டாற் கோபங்கொண்டு அவள்செய்த மகாபாதகத்துக்குத் தகுதியான தண்டனை விதிக்கப்படவில்லையென்று கண்டு தமது வாள்கொண்டு அவளது கையையும் அரிந்து நின்றார். இவர் இல்லறத்திலிருந்து சிவலிங்க பூஜையால் முக்தியடைந்தனர்.

## கழற்சிங்க நாயனார் திருக்கோட்டியூர் நம்பிகள்.

### இவர் பெருமை.

"ஒரு தனித் தேவி செங்கை
யுடைவாளாற் றுணித்த போது
பெருகிய தொண்ட ரார்ப்பின்
பிறங்கொலி புவிமேற் பொங்க
இருவிசும் படைய வோங்கு
மிமையவ ரார்ப்பும் விம்மி
மருவிய தெய்வ வாச
மலர்மழை பொழிந்த தன்றே"

## திருக்கோஷ்டியூர் நம்பிகள்.

இவர் கலி ௩௰உஅல் சர்வசித் வருஷம் வைகாசி ரோகணி நாளன்று அவதரித்தவர். இவர் ஆளவந்தார் என்னும் வைஷ்ணவாசாரியரின் சீடரில் ஒருவர். இவர் கருவிலே திருவுடையராயினும் டாலிய முதலே நன்கு சிக்ஷிதராய்த் தர்க்க வியாகரணசாஸ்திரங்களில்தேறி, அக்காலம் பிரஸித்தி பெற்றிருந்த வைஷ்ணவாச்சாரியராகிய ஆளவந்தார் ஸ்வாமியை யடுத்துச் சமையநூற் டயிற்சியும் நன்கு பெற்றவர். அவ்வாளவந்தார் ஸ்வாமியின் சீடர்கள் பலருள் திருமந்திரார்த்த ரஹஸ்யத்தை கற்றுத் தேறிப் பிறர்க்கும் உபதேசிக் நன்கு கக் கூடிய ஆற்றலும் வாய்ந்து விளங்கினவர் இந்நம்பிகளேயாவர்.

விசிஷ்டாத்வைத மதஸ்தாபகாசாரியராகிய ஸ்ரீராமானுஜன், யாதவப்பிரகாசரிடம் கல்வி கற்றுத் தேறி, ஸ்ரீ ஆளவந்தார் ஸ்வாமியிடம் வைத்த பக்தி மேலிட்டால், ஸ்ரீரங்கம் சென்று ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளியதைக் கேட்டுத் துக்கித்து அவரது விருப்பத்தை நிறைவேற்றுவான் ஸந்யாஸம் கொண்டு எழுந்தருளியிருக்கும் போது, திருமந்திரார்த்த ரஹஸ்[illegible]த்தைத் தெரிந்து கொள்ள உத்தேசியாராக இருந்தார். ஆளவந்தாரின் மற்றொரு சீடரான பெரியநம்பிகளிடம் ஸ்ரீ ராமானுஜன் சமயநூல் கேட்டு முடிந்தபோது, அப்பெரிய நம்பியானவர், "இன்னும் பற்பல பொருள் விசேஷங்களுண்டு; அவற்றைத் திருக்கோட்டியூர் நம்பியிடம் கேட்டுத் தெளிக" என்றார். அது கேட்ட ராமானுஜன், திருக்கோட்டியூர் நம்பிகளிடம் அந்த ரஹஸ்யார்த்தங்களைக் கேட்டுத் தெளிதலொன்றின் பொருட்டுத் திருக்கோட்டியூருக்குச் சென்றனர்,

வந்தவர் ஸந்யாசியாயினும், இருந்தவரான கிருஹஸ்தர் திருக்கோட்டியூர் நம்பி "அளிப்பது பெரிய விஷயமாகையால், அந்த ஸந்யாசி அதிகாரிதானோ? என்று" பரிசோதிப்பதற்காக, வந்தவர் பிரார்த்தனைக்குச் செவி கொடாமற் பாராமுகராகவே இருந்துவிட்டார்.

இங்ஙனம்ராமானுஜன்டதினெட்டுமுறை சென்று திரும்பியும் நம்பிபாராமுகராக விருந்தமை பற்றி வியாகுலராக ஸ்ரீரங்கம் சென்று, ஸ்ரீரங்கநாதனிடம் தமது உள்ளக்கிடக்கையைச் சொல்லி முறையிட்டார். பிறகு ஸ்ரீரங்கநாதன் திருவருளால் நம்பிகட்கு மனமிரக்கமும் அன்புமுண்டாகி, ராமானுஜனையழைத்து மந்திரார்த்த ரஹஸ்யத்தைப் போதிப்பான் தொடங்கி, "நாம் சொல்லும் அர்த்தவிசேஷத்தை", யார்க்கும் வெளியிடாதிருத்தல் வேண்டு

## கடிதங்கள்.

ரக்தாக்ஷி௵ சித்திரை௴ உசு௳

ஸ்ரீமான் ராய. சொக்கலிங்கஞ்செட்டியாரவர்களுக்கு, அன்புள்ள ஐயா!

நாளிது உசுஉ பத்திரிகையில் நான் எழுதிய வியாசத்தைப் பிரசுரிக்கப்படமாட்டாது, என்று சம்பிரதாயமான காரணங்கூறுகின்றீர்கள்.

தங்கள் மனப்போக்கும், பேனாமுனை சென்றவாறு மெழுதுகிறதை யாரும் தவறென்று காட்டினால் விஷயத்தை வெளியிடாது வைத்துக்கொள்கிறது. இது பத்திரிகாசிரியருக்கழகல்லவென்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

"இதனை வெளியிட்டால் மறுப்புக்கள் பலப்பல வருமென்றீர்கள்." தங்கள் கொள்கையைத் தாபித்தற்கு பெருஞ்சாதனமாகுமே. கொடுமை கொடுமை என்று எழுதப்புகும்போது ஒருவராலும் நாம் எழுதும் விஷயத்தை மறுக்கமுடியாதென்று முடிவு கட்டிக்கொண்டா எழுதினீர்கள்?

எவளவுதூரம் விவாதம் நிகழ்ந்தபோதிலும் இது ஒரு முடிவுக்கு வரப்போகிறதில்லை என்றெழுதுகின்றீர்கள்.

இது தெரிந்த நீங்கள் பத்திரிகையிலெதற்காகப் பிரசுரித்தீர்கள்? நமதுபத்திரிகைக்குச் சம்பந்தமில்லாததும், சமணமதக்கொள்கையுமான விஷயத்தை பிரசுரித்ததாங்கள் மறுப்புவந்தால் அதைப் பதிப்பித்துத் தங்கள் கொள்கையைச் சாதிக்கவேண்டும். முடியாவிடத்து மறுப்பை வெளியிட்டு, பின் தங்கள் அபிப்பிராயந் தெரிவிக்கவேண்டும். இதன்றி இட்டம்போ லெழுதுவதும் மறுப்புவந்தால்மௌனஞ்சாதித்துப்பிரசுரியாமற் காரணங்கூறுத லழகாகாது.

முன்னொருமுறை சிராத்தத்தன்று ஆண்டி பரதேசிக்கு அன்னம்போடச் சிபார்சுசெய்தீர்கள். தர்ப்பணம் பிண்டப்பிரதானம் உண்டா? இல்லையா? என்று சிலவினாக்கள் கேட்டிருந்தேன். அதற்கு மௌனஞ் சாதித்துவிட்டீர்கள். தங்களுக்கு இது தொன்றுதொட்ட வழக்கமாகயிருக்கிறது. மனம்போனபோக்கெல்லாம் போகிறதற்கிதொரு சாதனந்தான்.

பத்திரிகையிற் பதிப்பிக்கத் தங்களுக்கிஷ்டமில்லாவிடில் வியாசத்தைத் திருப்பி யனுப்பும்படி கேட்டுக்கொள்கிறேன்.

ஒரு அணாஸ்டாம்பு இதுடன் வருகிறது.

சுப். ரா. ம. கந்தசாமிச் செட்டியார்,
கடியாபட்டி.

ரக்தாக்ஷி௵ வைகாசி௴ கூஉ௳

ஸ்ரீமான் ராய. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்களுக்கு, ஐயா! யாகம் கொடுமையன்று என்னும் வியாசத்தை பிரசுரிக்க இஷ்டமில்லாவிடில் திருப்பி அனுப்பும்படி எழுதியிருந்து இதுவரை அனுப்பாமலும் பிரசுரியாமலும் இருக்கிறீர்கள். ஒரு விஷயத்தில் பிரவேசிக்குங்கால் ஆழ்ந்த யோசனையோடு செல்லவேண்டும். அதைவிட்டுத் தங்கள் மனம்போனபடி எழுதிவிட்டு அதற்கு மறுப்பு வந்தால் அதை வெளிப்படுத்தாமல் பத்திரிகைச் சட்டத்துக்கும் விரோதமாய் ஸ்டாம்பு அனுப்பியும் திருப்பி அனுப்பாதிருப்பது நியாயமும் முறையுமல்ல. தாங்கள் பத்திரிகை திருப்பி அனுப்பாவிட்டால் எழுதியனுப்பினவனுக்கு மீண்டும் எழுதச் சிரமமில்லை. நிற்க தங்கள் பத்திரிகையில் அடுத்த வாரத்தில் போட்டு அதற்கு மறுப்பு எழுத இஸ்டமில்லாவிடில் விவாதத்தை உத்தேசித்து இஸ்டமில்லை எனக் காட்டல் வேண்டும். இல்லையேல் தாங்கள் கொடுமை கொடுமை! என்னும் தலையங்கத்தை வாப்பீஸ் வாங்கிக்கொள்ளவேண்டும். இரண்டில் ஒன்றேனும் தாங்கள் செய்யாவிடில் நான் தனியே பிரசுரித்து தங்களது அபிப்பிராயம் சமண மதத்தில் முடியுமென்பதற்குக் காரணமும் காட்டி யாகத்தில் ஆடு கொல்லவேண்டுவது அவசியமெனப் பிரபலப் பிரமாணத்துடன் வெளியிட்டு, சிலோன், பர்மா, மலாயா முதலிய இடங்களுக்கும் அனுப்பி ஒரு கடை தவறாது கொடுக்கும்படி செய்வேன். அப்பால் வீண் மனஸ்தாபம் ஏற்படக்கூடாது என்பதற்கு இந்த லெட்டர் அனுப்பி இருக்கிறேன். தங்களால் நேரில் வாதம் செய்ய முடியுமானாலும் நான் அவ்விடம் வரத்தயார்; கொல்லலாகாதென்று பெரிய ஆதாரத்தைக்காட்டி வெகு சுலபமாய் எழுதிவிட்டீர்கள். நம்முடைய சமூகத்தையும் கெடுப்பதற்கு முக்கிய ஊன்றுகோலாக நான் மதிக்கின்றேன். காரணமுங் காட்டுவேன்.

சுப. ராம. கந்தசாமிச்செட்டி(யார்)

மென்று ஆக்கினை செய்து உறுதிமொழி வாங்கிக்கொண்டு, பிறகே "நலந்தருஞ் சொல்லின்" நய விசேஷங்களை யெடுத்தோதினர்.

ராமானுஜன், பிறகு, அவ்வர்த்தம் அதிகாரிகள் யார்க்கும் பயன்படுமாறு திருவுள்ளங்கொண்டு, அதிகாரி அநதிகாரியாகிய பலரும் நிறைந்துள்ள பெருங்கூட்டத்தின் மத்தியில் மேல் நின்று பெருங்குரலிட்டு உபந்யஸித்தனர். இது ஆசாரியனது ஆணைகடந்த செயலென்பது அவருக்கு நன்கு தெரியும்.

இச்செய்தியையறிந்த திருக்கோட்டியூர் நம்பிகள், ராமானுஜனை யழைத்து, "ஆசார்யோல்லங்கனம் செய்த பாவத்தையும் ஏற்றுக்கொண்டு இவ்வடாத காரியத்தைச் செய்து, திருமந்திரார்த்த ரஹஸ்யத்தைத் துர் விநியோகப்படுத்தலாமா?" என அதற்கு, ராமானுஜன், "ஆசார்யோல்லங்கனத்தால் வரும் பாவத்தால் அடியேனொருவன் தானே நரகடைவேன்! இவ்வரிய மந்திரத்தின் ரஹஸ்யார்த்தத்தைக் கேட்டுத் தெளிந்த அதிகாரிகள் பலர் அந்தமில் பேரின்பத்தழிவில் வீட்டுக் குரியராவரன்றோ?" என்று விடை பகர, அதனைக் கேட்ட நம்பிகள், மனம் திடுக்கிட்டு, இவரது மனக்கிடக்கை யிருந்தபடி யென்னே! யென்று வியப்புற்றும், "இப்படிப்பட்ட நல்லெண்ணம் நமக்குண்டாகவில்லையே" யென்று வருத்தமுற்றும் தேறி, அவ்விராமானுஜனை எம்பெருமானாரோ? எனத் தழுவிக் கொண்டருளினர்.

## அறிக்கை.

நான் சின்னாட்கட்கு முன் இன்ன இடத்திற்றான் தங்கியிருக்கிறேனென்பதில்லாமல் இரங்கூனிலிருந்தேன். அந்தச்சந்தர்ப்பத்தில் நமது அருமை வாய்ந்த "தனவைசிய ஊழியன்", நான் சொந்தஊருக்குவருவதாகத்தெரிவித்துவிட்டது. அப்பால் அது தவறென்றும் இரங்கூனில் இருப்பதாகவும் கூறிவிட்டது. அதனால் எனக்கு வரவேண்டிய சமாசாரப்போக்குவரத்து ஒன்றுஞ் சரியாகக் கிடைக்கவில்லை. ஆனதால் இப்போது நான் மணியுவா அரிசி ஆலையில் உத்தியோகத்திலமர்ந்திருக்கிறேனென்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இனி, என்பாலன்புற்று "கடிதம் முதலியன" எழுதும் அன்பர்கள் இதனடியிற் கண்ட விலாசத்திற்கு எழுதுவார்களாக.

நா. அருணசலம்,
அழகேசன் ரைஸ்மில்
மணியுவா, பர்மா ரெயில்வே.

## செவ்வூர்.

இவ்வூரைச் சேர்ந்த சத்திரப்பட்டி கிராமத்தில் நாளிது-மீ கഠ-உ மாலை ஐந்துமணிக்கு மகேச்வரர் பூஜை மிக சிறப்பாக நடைபெற்றது. ஓராயிரம் ஜனங்கட்கு அன்னம் அளிக்கப் பெற்றது என திருநாவுக்கரசு வாசகசாலை அங்கத்தினர் எழுதுகிறார்.



## தேகப்பயிற்சி.

நம்முடைய தேசத்தில் இன்னமும் தேகமுயற்சியாலுண்டாகும் நன்மை இவ்வளவென்று ஜனம் பொதுவில்அறிந்ததாகவில்லை. சிறு குழந்தைகளை அநியாயமாய்க் காலை முதல் மாலை வரை பள்ளிக்கூடங்களில் ஒரே இடத்தில் அசையாமலிருக்கும்படி செய்து தேகப்பயிற்சியே யில்லாமல் கெடுத்துவிடுகிறார்கள். இவ்விஷயத்தில் அனேகம் உபாத்தியாயர்களும், பிள்ளைகளின் பெற்றோர்களும் பெருத்த அபராதிகளாகிறார்கள். இப்படிச் செய்வதனால் பிள்ளைகளின் வித்தையானது அபிவிருத்தி யடைவதனைப் போக்கி. வரவர தேகதத்துவங்களின் செயல் குறைந்து, மனோவிருத்திகள் பலவீனமடைந்து வயது வந்த பிறகும் தகுந்தபடி விசேஷ மனோ முயற்சியை அவசியம் வேண்டுகின்ற படிப்பிற்கும் லாயக்கற்றவர்களாகின்றனர். இப்படி இச்சிறுவர் அவஸ்தைப்பட்டு படிப்பிலேயே செலுத்தப்பட்ட ஞாபகமுடையவராய் கഠ-மணி நேரத்தில் கற்றுக்கொள்வதைக் காட்டிலும் இரண்டத்தனை சரியான தேகப்பயிற்சியுடன் கூடின ஐந்து மணிப் படிப்பில் கற்றுக் கொள்வதும் தவிர, பிற்காலத்திற்கு வேண்டிய சரீர தத்துவ மனோதத்துவ பலங்களையும் சேகரித்துக்கொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை இச்சிறுவர்களைக் காலையில் கொஞ்சநேரம் சுலபமான தேகப் பயிற்சிகள் செய்யவிட்டுப் பிறகு மூன்று மணிநேரம் மனோ முயற்சிகள் செய்ய இடம் கொடுத்துப் பிறகு ஸாயங்காலம் இரண்டு மணிநேரம் படிப்பில் செலவிடச் செய்வதே மேன்மையென அறிவாளிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். ஆதலால், சிறுவர்கள் செய்யும் தேகப்பயிற்சிகள் அவரவர்களுக்குச் சந்தோஷத்தை விளைவிக்கத் தக்க விளையாட்டு மூலமாக அவரவர்களுடைய சகல சரீரங்களுக்கும் அதிலும் விசேஷ ஸந்திகள் மார்பு முதுகு முதலியவைகட்கும் பலம் கொடுக்க வேண்டியவைகளா யிருக்கவேண்டும். ஆகவே, விபாரியஸ்தர் விருத்தாப்பியர் பலஹீனர் சிறுவர் சிறுமி முதலியோர்களுக்கும் தேகப் பயிற்சி மெத்த அவசியம். இவர்கள் கடினமான தேகப்பயிற்சிகளைச் செய்யக்கூடாது. இலேசான வைகளைச் செய்யும்பொழுதும் இடைக்கிடையே இளைப்பாறிக் கொண்டு செய்யவேண்டும். லித்தீன் பாஷையில் "நல்லதேகத்தில்தான் சுறுசுறுப்பான மனதிருக்கும்" என்று ஒரு முதுமொழி வழங்கிவருகிறதாம். அதாவது தேக தத்துவங்கள் எவ்வளவுக்கெவ்வளவு ஒழுங்காயிருந்து தத்தம் வேலையைச் சரிவரப் பார்க்கச் சக்தியுள்ளவையா யிருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவுதான் மனதும் வேலைசெய்யும் திறனுடையதாயிருக்கும் என்பது பொருள். மனிதர்இவ்வுலக இன்பங்களை நுகர்வதானாலும்சரி, பரலோகசாதனம் தேடுவதானாலும் சரி, ஒருவனைத் தண்டிக்கவேண்டினும் சரி, தண்டிக்கப்படுவதானாலும் சரி, தேகவன்மை இன்றியமையாதது என்பதை அறிந்து கொள்ளவேண்டுமல்லவா? மனுஷ்ய சரீரம் வெகு விசித்திரமான யந்திரமெனப் பன்முறையும் சொல்லியுள்ளோமாகையால், ஜனங்கட்கு சௌகர்யத்தை உண்டு பண்ணக்கூடியதும், சில சமயம் நாசத்தை விளைவிக்க வல்லமையுள்ளதுமான நீராவியந்திரம் பீரங்கி முதலிய கருவிகளைப் போலவே இவ்வுலக வாழ்க்கைச் சுகத்திற்குக் காரணபூதமான நம்முடைய சரீரயந்திரமும் சிக்கலாய் அமைக்கப்பட்டு, வெகுஜாக்கிரதையாய் நடத்தப்பட வேண்டியதாய் இருக்கிறது. நீராவியந்திரம், கடிகாரம் போன்ற கருவிகளுக்கும், நமது தேகத்திற்கும் அனேக அம்சங்களில் ஒற்றுமையும் சில பாகங்களில் வேற்றுமையுமுண்டு. மற்ற யந்திரங்கள்போல் மானுடைதேகமும் பலவித அங்கங்களும், அனேக உறுப்புக்களும் ஒன்றோடொன்று பொருத்தப்பட்டு சலனாதி வியாபாரங்களைச் செய்யக் கூடிய ஸ்திதியி லிருக்கிறது. வேலைசெய்யக்கூடிய சக்தியானது சில யந்திரங்கள் விஷயத்தில் நிலக்கரி, கட்டை, ஜலம், தீ, வெடிமருந்து முதலிய உபகரணங்களாலும் கடிகாரம்போன்ற மற்றவைகளில் விசைகளை முடுக்கிச் சாவிகொடுப்பதாலும் ஏற்படுகிறது. இவ்விதமே நமது தேகயந்திரமும், தேகப்பயிற்சி, உட்கொள்ளும் உணவு ப்ராணவாயு, பானம் முதலிய இயற்கை வஸ்துக்களின் சகாயத்தால் நடமாடவும் வேலைசெய்யவும் சக்தி பெறுகிறது. மற்ற யந்திரங்களிற்போல, நம்முடைய சரீரத்திலும்காசாணுதி அங்கங்களும் உறுப்புகளும் இடைவிடாமல் செய்யும் வேலையினால் உண்டாகும் அழுக்கையும், வெளியிலிருந்து உடம்பின்மேல் படியும் புழுதி முதலிய அசுத்தத்தையும் அடிக்கடி துலக்கித் தேகத்தைச் சுத்தமாய் வைத்துக்கொள்ளவேண்டும். யந்திரங்கள் தங்களுக்குரிய வேலையைச்செய்யாமலிருப்பதால், எப்படி துருப்பிடித்து உபயோகமற்றதாய் விடுமோ, அதுபோலவே நமது சரீரத்திற்கும் தன்து நிலைமைக்குத் தகுந்த தேகப்பயிற்சி இல்லாவிட்டால், அது சரியான வளர்ச்சியின்லாமல் நோய்களுக்கு இரையாகி இவ்வுலக வாழ்க்கையின் சுகத்தை கெடுத்துவிடும். அல்லாமலும் மற்ற யந்திரங்கட்கும் நமது தேகயந்திரத்திற்கும் ஓர் பெருத்த வித்தியாச மிருக்கின்றது. அதென்னவென்றால், மற்ற யந்திரங்கள் ஆடஆடத்தேயும்; நமது தேகயந்திரம் ஆடஆட வளரும்; என்னே எல்லாம்வல்ல இறைவன் செயல்!! நினைக்கவும் பேசவும் கூடிய சக்தியும் பகுத்தறிவும் சுகமாய்நடமாடி வேலைசெய்யும் சாமர்த்தியமும் நமது சரீரத்தி லிருப்பதுபோல் மற்ற யந்திரங்களுக்கில்லை. இன்னும் மற்ற அம்சங்களில் நமது தேகத்திற்கும் மற்றகருவிகளுக்குமுள்ள ஒற்றுமை பேதம் பலவாகவிருக்கும்.

ராம. வெ. பழ. சோமசுந்தரம்,
மைடான் டில்லி.

## கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டம்.

இத் திருக்கூட்டத்தில் நாளிதுமீ அ-உ புதன்கிழமை திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் குருபூசையை முன்னிட்டு காலை அ-மணி முதல் சுவாமியவர்களின் திருவுருவப் படத்திற்குப் பூசை முதலியனசெய்து வைக்கப்பெற்றதும் ஸ்ரீமாந், அ. தாமோதரநாயுடு அவர்களால் சுவாமியவர்களின் சரித்திரம் மாலை ந-ஙഠ-மணிவரைவாசித்து முடிவெய்தியதும், அப்பால் கஙഠ அடியார்களுக்கும் ஏழைகளுக்கும் அன்னமளிக்கப் பெற்றதுடன் ஞானப்பாலும் வழங்கினார்கள். பின்னர் மாலை கு-ஙഠ-மணி முதல் பல அன்பர் குழாங்களால் தேவாரதிருவாசக முதலிய பஜனை பல இன்னிசைக்கருவிகளுடன் நடைபெற்றது. இரவு கூ-மணிக்கு இத்திருக்கூட்டத்தின் இரண்டாவதாண்டு கூ-வது கூட்டம் ஸ்ரீமாந் வயி. ராம. இராமசாமிச் செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில் கூடியதில், மாணவன் மது. கரு. ராம. சொக்கலிங்கமும், சி. மு. சுப. குழந்தையனும், முறையே கற்பு,கொல்லாமை என்னும் விஷயங்களைப்பற்றி விரிவாகச் சொற்பெருக்கிட்ட பின்னர் அக்கிராசனரவர்களின் முடிவுரையோடு கூட்டம் மங்களகரமாக கഠ-மணிக்கு நிறைவெய்தியது.

இரவு கக-மணிக்குத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமியவர்களின்படத்தை

# வைசிய நாட்டுச் செய்தி

### சிவநேசர் திருக்கூட்டம்.

ரக்தாக்ஷி ஆண்டு வைகாசித் திங்கள் மூன்றாம்நாள் பிரதோடத் தன்று இத் திருக்கூட்டத்தார் ஆத்திக்காடுதெற்கூர் வந்து சிவதெரிசனம் செய்து நாலாம் நாள் முற்பகல் பிற்பகல் இரண்டு நேரமும் கண்டனூர் செ. அரு. சித. கரு. இராமநாதன்செட்டியார், பலவான் குடி ராம. கு. ராம. இராசாமிச் செட்டியார், ஆ. தெற்கூர் கரு. முத்து. அரு. சிவலிங்கஞ்செட்டியார், மேலைச்சிவபுரி சொ. அண்ணாமலைச் செட்டியார், வ. பழ. சா. பழ. சிங்காரவடிவேல் செட்டியார், நெற்குப்பை மாணவர்கள் பெரி. சண்முகாநந்தன், சரவணபவன் ஆகிய சிவநேசச்செல்வர்கள் சைவப் பிரசங்கம்புரிந்து தேவாராதி அருட்பாக்களும் அருளிப்பாடினார்கள். ஐந்தாம் நாள் திருக்கொடுங்குன்றத்தில் சிவதரிசனமும் செய்துகொண்டார்கள். இத்திருக்கூட்டத்தார் ரக்தாக்ஷி ஆண்டு ஆனித் திங்கள் க,உ-ம் நாட்களாகிய சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் ஆவினிப்பட்டியிற்கூடி உரிய சிவத்தொண்டுபுரிந்து இளையாற்றக்குடியிலும் சிவதரிசனம் செய்வார்கள் என்று காரியதரிசி எழுதுகிறார்.

* * *

### கோப்பனூபட்டி.

கருப்பூருணியிலும் காவலில்லையா?

ஐயன்மீர்!

இந்நகரில் கறுப்பர்கோவில் ஊருணி என்ற ஓர் நீர்நிலை உண்டு. அது கூழிபிறை செ. மு. குடும்பத்தார் அவர்கள் நிர்வாகத்திற்குள் இருந்து வருகிறது. பானத்திற்குத் தண்ணீர் அதைவிட வேறு கிடையாது. பதினைந்து வருடத்திற்கு முன் மேற்படியா ரவர்கள் நிலமாய் உள்ள ஊருணியை வெட்டி மராமத்து செய்து மதகும் கட்டியிருக்கின்றார்கள். பத்து வருட காலமாய்க் காவலும் போடப்பட்டிருந்தது. இப்பொழுது நான்கு மாதங்களாய் எக்காரணத்தாலோ காவலும் இல்லாமற் போய்விட்டது. ஊருணியிலும் தண்ணீர் குறைந்து கொண்டே வருகின்றது. பல்விளக்குவதும், பாத்திரம் தேய்ப்பதும் குளிப்பதுமாகச் செய்கிற அநியாயங்களுக்கோர் அளவில்லை. பொதுஜன தன்மையை நாடுபவர்கள் போகின்ற சமயம் சொல்லித்தான் பார்க்கலாம். கையில் கம்புபிடித்துக் காவல் புரிய

---

புதிய கேடகத்தின் மீதெழுந்தருளச் செய்து முழுமையும் புஷ்பங்களால் அலங்காரம்செய்து பூசை முதலியன நடைபெற, சகல ஆடம்பர வைபவங்களோடும்கூழிபிறைச்சிவனடியார் திருக்கூட்டத்தாரின் தேவார திருவாசக நாம பஜனைகளுடனும் ஊர்வலம் செய்து வைக்கப்பெற்றதும், சுவாமியவர்கள் தமதிருக்கை வந்துசேர்ந்ததும், கந்தண தாம்பூல சிற்றுண்டிகள் வழங்கப் பெற்றன என்று காரியதரிசி எழுதுகிறார்.

முடியுமா? ஆனதால் தரும சீலரான செ. மு. குடும்பத்தாரவர்கள் தண்ணீரில் அசுத்தம் செய்யாது காவல் நியமித்துக் கட்டுப்பாடு செய்வார்கள் எனப் பொதுஜன் ஊழியன் தெரிவிக்கிறார்

* * *

### வேந்தன்பட்டி.

விசாக விழா:—நாளிது மாதம் ரு-உ கo-மணி முதல் கக-மணி வரை, ஷை விழா நிமித்தம் தண்ணீர்ப்பந்தலில், மகிபாலன்பட்டி திருவாளர் மு. சின்னையச் செட்டியார் சமூகச் "சீர்திருத்தம்" என்பதை உபந்நியசித்தனர்.

திருவள்ளுவர் திருநாள்:—(திருவள்ளுவர் வாசகசாலையின் ச-ம் ஆண்டு ந-வது கூட்டம்) சு-உ காலையில், வாசகசாலைக் கட்டிடத்தில், திருவாளர், மு. இராமசாமிச் செட்டியாரவர்களால் "திருவள்ளுவ நாயனார் சரித்திரம்" வாசிக்கப்பட்டபின், விநியோகம் வழங்கப்பெற்றது. மாலையில் தண்ணீர்ப் பந்தலில், திருவாளர்களான பாலையங் கோட்டை, ஆண்டியப்ப பிள்ளை "கடவுள் இலக்கணம்" என்பதைப்பற்றியும் மகிபாலன்பட்டி மு. சின்னையாச்செட்டியாரவர் "சுகாதாரம்" என்பதையும் அழகுபெறச் சொற்பெருக்கிட்டனர். இரவில் திருவள்ளுவர் படத்தைஅலங்கரித்து ஊருணியைப் பவனிவந்தனர்.

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் குருபூசை:—அ-உ காலையில் வாசகசாலைக் கட்டிடத்தில் திருவாளர், சேவு. சுப. சுப்பிரமணியன் செட்டியார் சுவாமிகள் புராணத்தை வாசித்தனர். எல்லாருக்கும் விநியோகம் அளிக்கப்பெற்றது என்று ஸ்ரீமான் நா. சோ. சோமசுந்தரம் எழுதுகிறார்.

---

### கணவன் மனைவியர் மர்மம். சீனப் பெண்கள்.

---

சீனப்பெண், தனது கணவன் எவ்வளவு கொடியனாக இருந்த போதிலும், தன் இஷ்டப்படி விவாஹத் தொடர்பை விடக்கூடாதவளாயிருக்கின்றாள். ஆனால், அவள் கணவனோ, கீழ்க்கண்ட குற்றங்களுடைய தனது மனைவியை விவாகச்சட்டப்படியே விலக்கிவிடலாமாம். அக்குற்றங்கள் வருமாறு:—(க) கல்யாண உடன்படிக்கையிற் கூறப்பட்ட படியில்லாதிருப்பது. (உ) மலடியாயிருப்பது. (ங) காமியாயிருப்பது. (ச) தாய்தந்தையரிடம் பக்தியில்லாதிருப்பது. (ரு) வாயாடித்தனமுடைமை. (சு) பொறாமையுடைமை. (எ) நிவ்ருத்தி செய்ய முடியாதநோயுடைமை. (அ) கணவன் உத்தரவின்றி வீட்டிலிருந்து வெளியே போதல். (கூ) கணவனையடித்தல்.

---

# பிறநாட்டுச் செய்தி.

சூரிய வெளிச்சம் ஜலத்திற்குள் கரு00-அடி தூரம் ஊடுருவிச் செல்லுகின்ற தென்று கண்டு பிடித்திருக்கின்றார்கள்.

* * *

லண்டனிலுள்ள இந்திய மாணவர்கள் லாலா லஜபதிராய்க்கு அ0-பவுன் அடங்கிய ஒரு பணப்பையும் ஒரு உபசாரப்பத்திரமும் சமர்ப்பித்தார்கள்.

*

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைவர் மறுத்தும் லட்சியம் செய்யாமல் தேசிய சபையில் பட்டாளச் சேவகர்கட்குப் உபகாரம் கொடுக்கும் மசோதா நிறைவேறிவிட்டது.

* * *

கான்ஸ்டாண்டி நோபிளில், துருக்கியரசாங்கத்தின் உள்நாட்டு மந்திரியான, பெரித்பே யானவர், பத்திரிகைகள் தம்மைத் தாக்கியெழுதியதற்காகத் தமது பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டனர்.

* *

டிரஸ்டன் என்ற இடத்தில் எ— ஜர்மனியர்கள் சேர்ந்து, உடனே மரணத்தை விளைவிக்கக் கூடிய ஒரு விஷ வாயுவைக் கண்டுபிடித்தார்கள். அவ்வாயுவைப்போல் சீக்கிரத்தில் நாசஞ்செய்யக்கூடிய வல்லமை வேறு எதற்கும் இல்லையாம். அதைக் கண்டுபிடித்த ஜர்மானியர்கள் அவ்வாயுவை ஓர் அறையில் வைத்து, அங்கு வேலை பார்த்துக்கொண் டிருந்தபோது, வாயு சரியாக மூடப்படாமலிருந்ததால், வெளியேறி அந்த ஏழு பேரையும் எமலோகத்துக்கு அனுப்பிவிட்டது.

* * *

ஜர்மனி யரசாங்கத்தை யமைப்பதன் நிமித்தம் தேசியக்கட்சியினர்க்கும் மத்தியக் கட்சியினர்க்கும் நடந்த சமாதானப் பேச்சுகள் பயன்படாமற் போய்விட்டன. வாண்டிக் பிட்லைப் புதிய பொக்கிஷ இலாகா மந்திரியாக நியமிப்பதென்ற தங்கள் உத்தேசத்தைத் தேசியக்கட்சியார் வற்புறுத்தியதே இதற்குக் காரணமாம். இனியேற்பட விருக்கும் அரசாங்கத்தின் கொள்கை தெரியும்வரை இம்மாதிரி தனிப்பட்டவர்களைப் பற்றித் தாங்கள் விவாதிக்க முடியாதென மற்றக்கட்சியினர் அபிப்பிராயப்பட்டனர். இதனால் சமாதானப் பேச்சு நின்றுவிட்டது.

---



# இந்தியச் செய்தி.

இலங்கை வதளையிலுள்ள மகம்மதியரிற் பெரும்பாலோர் நோன்புப் பெருநாளன்று கருப்புடையே தரித்திருக்கிறார்கள்.

* *

"தேசநன்மையைக் கோரி ஒத்துழையாமையையும் கைவிடுவோம்" என்று தாஸ்—நேரு அறிக்கை தெரிவிக்கின்றது.

* * *

மதுரையில் நடந்தேறிய கல்யாணமொன்றில், வந்திருந்த எல்லோருக்கும் தாம்பூலத்துடன் கதர்ச்சவுக்கம் ஒன்றும் அளிக்கப்பெற்றதாம்.

* * *

வைக்கம் சத்திபாக்கிரஹ இயக்கத்தின் பயனாக ஸ்ரீமான் ஈ. வி. இராமசுவாமி நாயக்கர் கொச்சியில் ஒரு மாதம் வெறுங்காவல் தண்டனையிற் சிறை புகுந்தார்.

* * *

ஸ்ரீமான் வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்கள் மீது கோயமுத்தூர்க்கச்சேரியில் கொண்டுவரப்பட்டிருந்த வழக்கு ஆதாரமற்றதெனத் தள்ளுபடி செய்யப்பட்டுவிட்டது

* * *

நாமக்கல் தாலூகா மகாநாடு நிகழும் மே-மீ ங0, நக தேதிகளில் பொட்டிரெட்டி பட்டியில் வைத்திடர் ஸ்ரீமான் ஞ. சே. சௌ. ராஜன் அக்கிராசனத்தில் நடைபெறும்.

* *

பம்பாயில் லோகமான்ய திலகரின் சரீரம் தகனம் செய்யப்பெற்ற புண்யபூமியைச் சுற்றி வேலியொன்று கட்டிவைக்கப் பம்பாய் நகரபரிபாலன ஸபையார் தீர்மானித்திருக்கின்றார்கள்.

* * *

தீண்டாமையெனும் கொடிய வழக்கத்துக்கு சாஸ்திரங்கள் இடங்கொடுக்கவில்லையென்று, திருவண்ணாமலையிலிருக்கும் வெங்கத்தூர் காவிய கண்ட கணபதி சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள்.

* *

சென்னையில் இந்து மஹாஸபையின் கிளைச் சபையொன்று ஏற்பட்டிருக்கின்றது. அதற்கு, ஸ்ரீமான் சல்லா குருசாமிச் செட்டியார் தலைவராகத் தெரிந்தெடுக்கப் பட்டிருக்கிறார்.

* * *

பொது ஜனங்கள், தங்கள் துகடிகாரங்களைச் சரியாகத் திருத்தியமைத்துக் கொள்வதற்கு அநுகூலமாகப் பெங்களூரில், இரவு கூ மணி அடித்ததும் ஒவ்வொரு மின்சார விளக்கும் திடீரென்று இரண்டொரு வினாடிகள் அணைத்து வைக்கப்படுகின்றனவாம்.

* * *

தமிழுக்கும் சைவத்துக்கும் இதுவரையிற் பெருந் தொண்டு செய்து கொண்டிருந்த காசிவாசி ஸ்ரீ செந்திநாத ஐயரவர்கள் திருப்பரங்குன்றத்தில், சென்ற வாரத்தில் காலஞ் சென்று விட்டனர் என்பது கேட்டு விசனிக்கிறோம். அவரது ஆன்மா சாந்தியடைவதாக

* * *

ஆரணியையடுத்துள்ள குன்றத்தூருக்கு அருகில் ஒரு குளத்தில் ஸ்நானம் செய்யச்சென்ற ஒருவர், ரு00-ரூபாய் நோட்டுகளை ஒரு ஆலிலையில் சுற்றிவைத்து நீரில் ஸ்நானம் செய்துகொண்டிருக்கும் போது, ஒரு எருமைமாடு வந்து இலையுடன் நோட்டுகளையும் தின்றுவிட்டது.

*

ஒவ்வொரு தேசீய சபையும், வைக்கம் சத்திபாக்கிரஹ இயக்கத்துக்குக் குறைந்ததுபத்துத்தொண்டர்களையாவது அனுப்பித்தல் வேண்டுமென்றும், அவருள் பெண்மணித்தொண்டர்களும் இருத்தல் வேண்டுமென்றும் ஸ்ரீமான்நாயக்கர் கொச்சியிலிருந்து வேண்டிக்கொண்டிருக்கிறார்.

* * *

ஜயப்பூரி ராஜா வீட்டுக் கலியாணத்துக்குச் சென்றிருந்த வீரர் ஸ்ரீமான் ராமமூர்த்திக்கு இரண்டு கரடிகளும் ஒரு புலிக்குட்டியும் ஒரு யானைக்குட்டியும் ஒரு தங்கப் பதக்கமும் இனமளிக்கப்பட்டனவாம். இவற்றின் விலை மதிப்புத் தொகை ரூபாய் பதினாயிரமென்று சொல்லப்படுகின்றது.

* * *

பிரபல பாகவதரும் ராமாயண காலக்ஷேபத்தில் மிகத் தேர்ச்சி பெற்றவருமான திருப்பழனம் பஞ்சாபகேச சாஸ்திரியார்காலஞ்சென்றமைபற்றி சென்னை சங்கீத வித்வான்கள் அனைவரும் தியாகப் பிரம்ம ஸபையின் ஆதரவில்கூடி ஒரு அநுதாபத் தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

* * *

வருகிற ஜூன் மாதம் முதல் வாரம் முதல் "நவசக்திப்" பத்திரிகை வாரப்பதிப்பாகவே பதிப்பிக்கப்படுமென்றும், மும்முறைப் பதிப்பு இம்மாத முடிவில் நிறுத்தப்படுமென்றும், மும்முறைச் சந்தாதாரர்க்கு அவர் செலுத்தியுள்ள சந்தாத்தொகைக் காலவரை முடியுமட்டும் வாரப்பதிப்பு அனுப்பப்படுமென்றும் வாரப்பதிப்பை யாவரும் ஆதரிக்க வேண்டுமென்றும் "நவசக்தி" ஆசிரியர் வேண்டுக்கொள்ளுகிறார்.

* * *

திருநெல்வேலி, சங்கரன் கோவில் தாலுக்காவிலுள்ள மேக்கட்டான்சேவல் ஜமீனைச் சேர்ந்த பண்ணையூரில் உள்ள நாடார் வகுப்பினர் சுமார் ௩0-பேர்கள் காவடி எடுத்து ஆடிக்கொண்டே சிவன் கோவிலுக்குள் நுழைந்து கடவுளைப் பிரார்த்தித்தார்கள். இதைக் கண்டு அங்குள்ள வைதிக இந்துக்களில் அநேகர்க்குள் பலத்த உணர்ச்சி யுண்டாயிருக்கின்றதாம். அவர்கள் மேல் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறார்களாம்.

* * *

"பிராணிகளைக் கொலைசெய்ய வேதங்கள் ஒருபோதும் இடம் தரவில்லை. மகாகுல் அறுவடைக் காலத்தில் பிரஜைகளை ரக்ஷிக்கும் போது அரசன் அசுவமேதன் என்றும், வயல்களையுழுதும்ஜனங்களும் உழுது சாகுபடி செய்யுமாறு நடத்தியும் அரசன் ரட்சிக்கும்போது கோமேதன் என்றும் சொல்லப்படுகின்றது. ஐரோப்பிய விற்பன்னர்கள் இலகுவாகச் சொற்களை மொழிபெயர்த்து விட்டதால் வந்த கேடு இது. உண்மையான கருத்து உங்கட்கு விளங்காமலே போகின்றது. அந்நியர்கள் நமது சாஸ்திரங்களையும் வேதங்களையும் கெடுத்து விடுகிறார்கள். அவற்றைப் பிறர் கருத்தைக் கொண்டு நாம் படிக்காமல் நேரே படிப்போம்" என்று ஸ்வாமி சித்தானந்தர் கூறுகிறார்.

---

### தார்க்குவிப் பெண்.

மத்திய ஆப்பிரிக்காவிலிருக்கும் தார்க்குவி பெண்ணும் ஜாதிப்பெண்கட்கு மிகுந்த சுதந்தரமுண்டு. அந்தப் பெண் குடும்பத்தில் மாத்திரமேயன்றிப் பொது ஜனசபைகளிலும் தலைமை வகித்து நடத்தும் சுதந்தரம் பெற்றிருக்கின்றாள். அவள் செய்வதெல்லாம் நியாயமானதாகவே கருதப்பெறும். அவள் இஷ்டப்பட்டால் தனது கணவனை விலக்கிவிடலாம். ஆனால், அவள் குற்றம் புரிந்த போது, கணவன் அவளை வாயப் பேச்சாற் கண்டிக்கலாமே யொழியவேறொன்றும் செய்ய முடியாது. போஜனத்தின்போது அவளே முதலிற் சாப்பிட வேண்டுமாம். பின்புதான் குழந்தைகளும் கணவனும் பிறகும் சாப்பிடவேண்டுமாம்.

---

காவென் செயும்! வினை தானென்
செயும்! எனை நாடிவந்த
கோவென் செயும்! கொடுங் கூற்றென்
செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்.

காரைக்குடி. வைகாசிமீ கசஉ

## பத்திரிகையின் கடமை.

பத்திரிகையின்கடமை இன்னதென்பதை யுணராது பலர் பரிதபிக்கின்றனர். அவர்கட்கு அதனை உணர்த்த வேண்டுவது இன்றியமையாத ஒரு கடமையாதலின் அதனைச் சிறிது வரைவோம். ஆனால், அதனை அறிஞர் ஏற்றுக்கொள்வர்; மற்றவர்? ... ... நாம் கூறவேண்டுதைக் கூறிவிடுவோம். நல்லவர் கொள்ளட்டும். அல்லாதாரைப்பற்றி நாம் கவலைகொண்டு பயனில். "மணலையுங் கயிருய்த் திரிக்கலாம் கயவர் குணமட்டுந் திருப்பவசமோ" என்றுரன்றோ ஒரு புலவர்.

பத்திரிகை என்றால் என்ன என்பதை இந்நாள் எவர்க்கும் விளக்க வேண்டுவதில்லை. பல பொருள்களையுந் தாங்கி வருவது பத்திரிகை. ஒவ்வொரு பத்திரிகை ஒவ்வொரு துறையை முக்கியமாகவைத்திருக்கும். பத்திரிகை மக்களைப் பண்படுத்துதற்காக ஏற்பட்ட ஒரு சாதனம். பத்திரிகையில் பல்வேறு இடங்களினின்றும் பற்பல அறிஞர்கள் கட்டுரை முகமாகத் தத்தங் கருத்துக்களை வெளியிடுவர். ஒவ்வொரு பத்திரிகைக்கும் தலைமையாசிரியர் ஒருவரிருப்பர். பத்திரிகை நடாத்தும் பொறுப்பு அவரையே சார்ந்தது. எந்தப்பொருள் பற்றி எவர் எழுதினபோதினும் எல்லாவற்றுக்கும் பொறுப்பாளி அவர்தாம். பத்திரிகையின் கடமை இன்னது என்பதை அவர் நன்றாக உணர்ந்திருத்தல் வேண்டும். இன்றேல், அப்பத்திரிகை செவ்வனே நடந்தேறாது.

பத்திரிகை நடாத்துபவர், நடுநிலை வாய்ந்தவராக விருத்தல் வேண்டும்; அஞ்சாமையை ஆபரணமாகப் பூண்டவராக விருத்தல் வேண்டும்; உண்மைக்கு உறையுள்ளாக உறைதல் வேண்டும்; உலகத்தை நன்றாய் உணர்ந்தவராக விருத்தல் வேண்டும்; பிற நற்குண நற்செயல் யாவும் அமைந்தவராக விருத்தல் வேண்டும். அவரால் நடாத்தப் பெறும் பத்திரிகைதான் வளம்பெறும்.

இந்நாள் வருவாய் கருதியோ பிற கருதியோ பத்திரிகைநடாத்த எல்லோரும் முன் வந்து விடுகின்றனர். ஒன்றுமறியாரெல்லாம் பத்திரிகை நடாத்த வந்துவிடுவதால் பத்திரிகையின் மதிப்புத்தான் குறையும். பத்திரிகை நடாத்துவதென்பது இலேசான காரியமல்ல. பத்திரிகை படிக்கும் மக்களுள் பல்வேறு வகையான மக்களிருப்பர். ஒருவருக்கு ஒன்று பிடிக்கும்; மற்றொருவருக்கு அது பிடிக்காது; இன்னொருவருக்கு வேறொன்று வேண்டும்; அம்மம்ம! பத்திரிகாலயங்களில் சிறிது இருந்து பார்ப்பார்க்கு அத்தொல்லைகள் தெரியாமற்போகா.

பத்திராசிரியர்கள் எவர் என்ன தொல்லைப் படுத்தின போதினும் சிறிதும் அஞ்சாது திண்மையாகத் தம் கொள்கையில் நாட்டஞ் செலுத்திச் செல்பவராக விருத்தல் வேண்டும். மற்றவர்க்காக அஞ்சி ஒன்றைச் செய்யும் ஒருவர் பத்திராசிரியர் பதவிக்கு யோக்யதையுடையவரல்லர்.

மக்கட்கு அறிவைப் பரப்புதலே பத்திரிகையின் கடமையாகும். வீண் சண்டைகளை வளர்த்தல் பத்திரிகையின் கடமையாகாது. வாதிடவேண்டிய விஷயங்கள் உண்டு. அவை அப்பத்திரிகைக்கேற்றனவாக—மக்கட்குப் பயன்படுவனவாக விருந்தாலன்றி அவற்றை அப்பத்திரிகை கொள்ளலாகாது.

ஒரு சண்டையை நடாத்துதல் அநாவசியமென ஒரு பத்திராசிரியர் தீர்மானத்துவிடுவாரானல், அதுபற்றி அப்பத்திரிகைக்கு எழுதுதல் அழகாகாது. வேண்டாத அதை வெளியிடுதல் அப்பத்திரிகையின் கடமையாகவுமாட்டாது. விஷயத்தை உணராது பலர்சிரமப்படுகின்றனர். பொருளற்ற சண்டைகளைப் பத்திரிகையிற் கிளப்பி விடுகின்றனர். அதற்கு முடிவு ஒருநாளுங்கிடையாது. எந்த விஷயத்திலும், ஒரு சாரார் தோற்றார். ஒருசாரார்வென்றார்; என்பதுகிடையாது. கடைசி வரையில் நியாயமாகவோ, நியாய மில்லாமலோ எதையாவது எழுதிக்கொண்டிருப்பது; இறுதியில் எழுதியிருப்பவர் கட்சி வெற்றி; இதுதான் இப்பொழுது நாம் பத்திரிகைச் சண்டைகளில் காணும் உண்மை. ஆனால் ஒருவருடையது இறுதியாக இருக்க மற்றவர் விடமாட்டார். இப்படிப் போய்க்கொண்டேயிருக்கும். நிறுத்துவதற்கு ஒரு வழிதானுண்டு. "இனிப் பிரசுரிக்கப் படமாட்டாது" என்ற குறிப்பையெழுதிப் பத்திராசிரியர் நிறுத்தினலன்றி முடிவில்லை. இவ்வாறாகச் சண்டையே குறியாக்கொள்தல் வெறுக்கத் தக்க செயல். 'இனிப்பிரசுரிக்கப் படமாட்டாது' எனப் பத்திராசிரியர் பொறித்த பின்னரும், "இனிப் பிரசுரிக்க முடியா தென்று எழுதிவிட்டீர்கள்; இருந்தாலும் இது மிகவும் அவசியமாக விருப்பதால் கட்டாயம் போடுவீர்களென நம்புகிறேன்" எனவும் எழுதுகிறார்களென்றால், அதைப்பற்றி என்ன கூறவிருக்கிறது? எழுதியவர்க்கு எல்லாம் அவசியமாகத்தானிருக்கும்; அவசியமில்லையென்று அவருக்குப்பட்டால் ஏன் எழுதப்போகிறார். சிலர் மிகவும் சிரமப்பட்டு எதையேனும் எழுதியனுப்புவார்கள். அது பத்திரிகையில் வெளியிடத்தக்கதாக இருக்கமாட்டாது. அதனை என்செய்வது? நிறுத்திவிடுதல்தான் கடமை.

சிலர், பத்திரிகையின் கடமையறியாது உலகத்தை உணராது எதையேனும் எழுதித் தள்ளிவிடுவார்; எதற்கு மறுப்பு எழுதலாமெனஎண்ணிக்கொண்டேயிருந்து மற்றவர் பழிப்பரே யென்ற வெட்கம் சிறிதுமில்லாது கண்டபடியாகப் புலம்பித்தீர்த்துவிடுவார்; தாம் உலகத்துக்குஒவ்வாத- அறிஞர்க்கு அங்கீகாரமில்லாத ஒரு அசட்டுக்கொள்கையைக் கொண்டு, தங்கொள்கைக்கு மாறாக எவர்எதைச் சொன்னபோதினும் உடனே கிளம்பி மறுப்பென்று ஒன்றை எழுதிவிடுவார். உலகத்தில் எத்தனையோ பலகொள்கைகளிருக்கின்றன. ஒவ்வொரு மனிதனும் "என் கொள்கைக்கு விரோதமாக எழுதக்கூடாது; எழுதினல் நான் எழுதும் மறுப்புக்கெல்லாம் இடந்தர வேண்டும்; இன்றேல்எப்படி எழுதலாம்; அது; இது;" என்று ஆரம்பித்தல் ஆகுமோ? அது எவ்வளவு பெரிய மூடத்தனம்? அவ்வாறு ஒரு பத்திரிகை நடைபெற முடியுமோ? எவர், எதை எழுதினபோதினும் வெளியிட்டு அதற்குப் பதில் சொல்லிக்கொண்டேயிருத்தல் பத்திரிகையின் கடமையன்று.

## திருவாளர் கந்தசாமிச் செட்டியார்.

இவர்கடிதங்களிரண்டு இரண்டாம் பக்கத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றன. அவற்றை நன்றாகப் படிக்குமாறு அன்பர்களை வேண்டுகிறோம். நமது செட்டியாருக்கு ஒருபெரிய பதிலெழுதிப் பத்திரிகையைக் கெடுக்க நாம் விரும்பவில்லை. அக்கடிதங்களைக்காணும் அன்பர்கள் நமது செட்டியாரின் தன்மையை நன்கு தெரிந்துகொள்வார்கள். நமது கந்தசாமிச் செட்டியாரின் அறிவாற்றலை நாம் அநுபவித்தோடமையாது பொதுஜனங்களும் அநுபவிக்க வேண்டுமென்று விரும்பியே அக்கடிதங்களை வெளியிட்டிருக்கிறோம். மக்கள் தத்தம் அறிவிற்கேற்றவாறு நமது செட்டியாரை அறிந்து கொள்வாராக. அது பற்றி இன்றியமையாத சில செய்தி மட்டும் கூறவிழைகிறோம்.

"கொடுமை கொடுமை" எனமகுடமிட்டு நாம் ஒரு உபதலையங்கம் எழுதியிருந்தோம். அதற்கு இவர் ஒரு மறுப்பெழுதியிருந்தார். அதனைப் பிரசுரிக்க முடியாதென எழுதியிருந்தோம். அவர் கட்டுரையைத்திரும்பக் கேட்கும் முகத்தான் எழுதப்பட்ட கடிதம் முதலில் வெளியிட்டிருப்பது. அக்கடிதம் வந்தபொழுது நமது ஆசிரியன் ஊரிலில்லை. இது விவாத விஷயமாதலால் ஆசிரியன் பார்வைக்குக்கடிதம் அனுப்பப்பட்டது. ஆதலால் சிறிது சுணங்கிவிட்டது. இரண்டாவது கடிதத்தை இவர் எழுதுமுன்னரேயே இவர் கட்டுரை திரும்ப அனுப்பப்பட்டுவிட்டது. ஆனால் அதற்கு எட்டு முன் எழுதிய கடிதம் இரண்டாவது வெளியிடப் பட்டிருப்பது. இதுதான் நடந்த கதை. கடிதங்கட்கு பதிலெழுதுவதாயின் கரை கடக்கும். செட்டியார்மிகவும்மனம் வருந்த நேரும். ஆகலின் வேண்டாம். விடுக்கின்றோம். வீணில் ஒரு ஆன்மா வருந்துவதில் நமக்கு என்ன பயன்? ஆனால் செட்டியார் விருப்பப்படி, துண்டுப்பிரசுரங்கள் பல்லாயிரக் கணக்காக அச்சடித்து, ஒவ்வொரு கடைக்கு ஒவ்வொன்று மட்டும் கொடுத்தல்கூட அமையாது; ஒவ்வொரு கடையிலுள்ள ஆட்களையும் எண்ணி ஒரு ஆளுக்கு இரண்டிரண்டு கொடுக்க வேண்டுமென்று சிபார்சு செய்கிறோம். அதனால் நாம் எவ்வித மனவருத்தமும்கொள்ளமாட்டோமென்று உறுதியாகக்கூறுகிறோம். அதைப்பற்றிச் சிறிதும் யோசிக்க வேண்டாம். வாதிடவருவதாகச் சொல்கிறார். பிரியமிருந்தால் வரட்டும். நமக்கு ஆட்சேபனையில்லை. வருவதாயின் நாளைக் காலையில் நமது ஆசிரியன் குற்றாலம் போகிறான். அங்குஓய்வுண்டு. அங்கு வரலாம். செட்டியார் கடிதங்களில் முன்னையது செட்டியார் என்றும் பின்னையது ஆர் விகுதி இல்லாமலும் கையெழுத்திடப்பட்டிருந்ததால், பின்னையதில் நமது கொள்கைக்கு விரோதமின்றி நக. வளைவிற்குள் அது பொறித்தோம். கடிதங்களிரண்டும் அவர்கள் எழுதியப்படியே ஒவ்வொரு எழுத்தும் பார்த்து வெகு சிரமப்பட்டு அச்சிட்டிருக்கின்றோமாதலின், அவற்றில் மலிந்து கிடக்கும் பிழைகளனைத்தும் அவர்களது என்பதைப் படிப்பவர்கட்கு அறிவித்துக் கொள்கிறோம். பிழையைத் திருத்தினால் அதில் மோசம் போய்விட்டதென்று சொல்வார்களென்பதற்காக அப்படியே பதிப்பித்தோம். அன்பர் இனி எச்சண்டையைபற்றி எமது பத்திரிகைக்கெழுத [illegible] விலுங் கருதாதிருப்பாராக! [illegible] தின் கண்டிப்பாக இடம் கிடைக்காது. சிரமமின்றி ஆரம்பத்திலேயே துண்டுப்பிரசுர வேலையை மேற்கொண்டு விடலாம்.

## இடிமுழக்கம்.

**தாஸ்—நேரு அறிக்கை.**

ஸ்ரீமான்கள் தாஸ்-வும் நேருவும் மகாத்மாவைப் பேட்டிகண்டு பேசித்தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும் அறிக்கையொன்று வெளியிட்டிருக்கிறார்கள். அதில் "தடைமுறை" என்பதற்குப் புதுவுரை கூறியிருக்கின்றார்கள். அந்த அறிக்கையில் பின்வரும் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

"மகாத்மாவிடமும் அவர்களின் அபிப்பிராயங்களிடமும் எங்கட்குச் சிறந்த மதிப்பு இருக்கின்றதாயினும், இவ்விஷயத்தில் அவருடைய வாதத்தை நாங்கள் ஒப்புக்கொள்ள முடியாதவர்களாயிருக்கிறோம்" "சுயராஜ்யக் கட்சியாரின் திட்டத்தை மகாத்மா ஒப்புக்கொள்ளும்படி செய்ய எங்களால் கூடாமற்போனதைப் பற்றி வருந்துகிறோம்" "ஒத்துழையாமை யென்பதுபெரிதும் மனப்பான்மையைப் பொருத்தவொரு விஷயமாயின், அதிகார வர்க்க அரசாங்கத்தின் ஆட்சிக்குட்பட்ட நமது தேசிய வாழ்வின் உண்மை நிலைமை ஒட்டி அனுஷ்டித்துக் காட்டப்பட வேண்டிய ஒருயிருள்ள கொள்கையல்லவானல், தேசநன்மை முன்னிட்டு ஒத்துழையாமையையும் கைவிடுவது எங்கள் கடமையென்று நாங்கள் கருதுகின்றோம்."

**தாரகேசுவர சத்தியாக்கிரகம்**



தொண்டர்கள் மகந்தின் வீட்டுக்குள் நுழைய முயற்சிசெய்ததன்மேல் கஉ-பேர் கைது செய்யப்பட்டனர். கஉ-மணி நேரத்துக்குள் தாரகேசுவரத்தை விட்டுப் போக வேண்டுமென்று ஸ்வாமி விஸ்வானந்தருக்கு ககச வது பிரிவின் மேல் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அவர் அதை மீறி நடந்தார். உடனே கைது செய்யப்பட்டு ஹூக்ளிக்கு அனுப்பப்பட்டார்.

## உள்ளூர்ச் செய்தி.

சென்னை உண்டியல் வட்டம் ௦—௬—௬
இரங்கூன் உண்டியல்வட்டம் க—அ—௦

### மதுரை தேசபக்த சமாஜத்தார்

இந்தக் கூட்டத்தார் இன்று தேவகோட்டையிலிருந்து இங்கு வந்திருக்கிறார்கள். இன்னும் உ, கூ-தினங்கள் இவ்வூரில் தங்கியிருப்பார்களென்று தெரிகின்றது. இவர்கள் தமிழ்நாடு முழுதும் சென்று தேசீய பஜனை மூலம் பொதுஜனங்கட்கிடையில் தேசீயக் ஊக்கத்தையும் கிளர்ச்சியையும் உண்டுபண்ணியிருக்கின்றார்கள் என்பதைப் பத்திரிகாபிமானிகள் நன்கு அறிந்திருப்பார்கள். இவர்கள் விடாமுயற்சி கொண்டு, தியாகிகளாக இருந்து இவ்வூழியம் செய்து வருகின்றார்கள். தமிழ் நாட்டுக் கவிச் சக்கரவர்த்தியாகிய காலஞ்சென்ற ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியாரவர்களின் வீரப் பிரதாப— தேசபக்தி விளக்கப் பாடல்களாற் பொதுஜனங்களை யெழுப்பி வருகின்றார்கள். இக் கூட்டத்தார் இன்று நம்மூர் நாடி வந்திருக்கின்றார்கள். இக் கூட்டத்தாரை நன்கு ஆதரித்து, வேண்டிய உதவியைச்செய்து, அவர்களது நன்னோக்கமும் நற்செயலும் முன்னேறுமாறு செய்யவேண்டுவது பொதுஜனங்களின் முக்ய கடமையாகுமென்பதை நாம்வற்புறுத்துகின்றோம். இவர்கள் விஷயத்தில் தேசாபிமானிகளைத் தூண்ட வேண்டுவது அவசியமில்லையென்று கருதுகின்றோம்.

### காரைச்சிவனடியார் திருக்கூட்டப் பிரசாரம்

௬௨ மாலை ௬-மணிமுதல் எ-மணிவரை திருஞானசம்பந்தர் திருநாளை முன்னிட்டு நகரச்சிவன்கோவிலில் திருவாளர் சேவு. மெ. மெய்யப்பசெட்டியார் ஓர் அறிவிப்பு உபந்யாசம் செய்தார்கள்.

இரவு அ-மணிமுதல் கக-மணிவரை கல்லுக்கட்டியில் முத்தாளம்மன் குட்டிவெட்டுப் பொங்கலை முன்னிட்டு திருவாளர்களான ஆவி.லெ. அருணாசலஞ்செட்டியார் அரு. சோமசுந்தரச் செட்டியார் சொ. முருகப்ப செட்டியார் ப்ரம்மஸ்ரீ மோ. வே. கோவிந்தராஜய்யங்கார் முதலிய அன்பர்கள் நீண்ட சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

அ௨ நகரச்சிவன்கோவிலில் திருஞானசம்பந்தர் திருநாள் மிகவிமரிசையாக கொண்டாடப்பெற்றது. எ-மணி முதல் ௬-மணிவரை திருவாளர் சேவு. மெ. மெய்யப்பசெட்டியார் திருஞானசம்பந்தப்பிள்ளையார் திவ்ய சரித்திரத்தைப்பேசினார்கள். பிறகு மாணவி ராம. மெய்யம்மை ஜீவகாருண்யச் சிந்து பாடசபை இனிதுநிறைவெய்தியது. அடியார்கட்கு ஞானப்பால் நல்கப்பெற்றது. சுவாமி திருவீதிவலம் வரும்பொழுது திருக்கூட்டத்தார் பஜனை செய்துகொண்டுவந்தார்கள்.

௬௨ மாலை எ-மணிமுதல் ௬-மணிவரை நகரச் சிவன்கோவிலில் திருவாளர்களான அரு. சோமசுந்தரச்செட்டியாரும் சொ. முருகப்ப செட்டியாரும் ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

இரவு க௦-மணி முதல் க௨மணி வரை கல்லுக்கட்டி வடகரையில் ப்ரமஸ்ரீ அரிஹரசிவம் அவர்களாலும் திருவாளர் அரு, சோமசுந்தரச்செட்டியாரவர்களாலும் பிரசங்கங்கள் நடைபெற்றன.

க௦௨ முத்தாளம்மன் குட்டிவெட்டுப் பொங்கலன்று சிவன்கோவில் ராஜகோபுரத்தில் திருவாளர்களான அரு. சோமசுந்தரச்செட்டியார் டி. வி. முத்தையாசெட்டியார் முத்த. வெ. சொக்கலிங்கம் செட்டியார் சொ. முருகப்பசெட்டியார் முதலிட அன்பர்கள் பிரசங்கம் செய்தார்கள் என்று நமது நிருபர் எழுதுகிறார்.

## ஓர் அறிக்கை.

நமது தனவைசிய ஊழியர்சங்க அபிமானிகள் வெளியூர் சென்று உலாவுங்கால் தயவு செய்து அங்குள்ள விலாசத்தை ஊழியர்சங்கக் காரியாலயத்திற்கும் காரைக்குடியிலுள்ள ஊழியன் பத்திரிகாலயத்திற்கும் அறிவிக்குமாறு வேண்டுகிறேன் அறிவிக்காமல் பலர் வேறிடங்கட்குச் சென்றுவிடுகிறார்களாகலின், அவர்கட்கு அனுப்பப் பெறுபவை யெல்லாம் திரும்பி வருகின்றன. அவைகளை அவர்கள் பெறமுடியாமற் போவதோடு வீண் நஷ்டமும் ஏற்படுகிறது. ஆகலின் தவறாது எழுதிவிடுவார்களென நம்புகிறேன். ஊழியன் பத்திரிகாலயத்திற்கு அறிவித்தாற்றான் பத்திரிகை கிரமமாக வரும். ஊழியர்சங்கக் காரியாலயம் தற்காலம் தேவகோட்டையி லிருக்கிறது என்பது தெரிந்த விஷயம்.

அ. வெ. தியாகராஜா,
காரியதரிசி
த. வை. ஊழியர் சங்கம்,
காரியாலயம், தேவகோட்டை.

## தந்திச் செய்தி.

பினாங்கு வைகாசி-மீ கந-உ

சென்னை உண்டியல்விலை நூற்று அறுபத்தைந்து.
ஈயம் விலை நூற்றிரண்டு.
ரப்பர் விலை முப்பத்தொன்பது.

இரங்கூன் வைகாசி-மீ கந-உ

| | |
|---|---|
| இயந்திர அரிசி பெரிது | ௪௬எ—௦—௦ |
| ஷை சிறிது | ருநரு—௦—௦ |
| மீடோன் அரிசி | ருகரு—௦—௦ |
| படகு நெல் | க௬அ—௦—௦ |
| இருப்புப்பாதை நெல் | க௬௪—௦—௦ |
| புதிய வெள்ளைமொச்சை | உ௬௦—௦—௦ |
| பழையமொச்சை | உகரு—௦—௦ |
| கடலை | ௪௦ரு—௦—௦ |
| தட்டைப்பயறு | ௪ரு௦—௦—௦ |
| காராமணி | உஅ௦—௦—௦ |
| மொச்சை | ௪அ௦—௦—௦ |
| உழுந்து வாங்குவது | நந௦—அ—௦ |
| ஷை விற்பது | ந௬ரு—௦—௦ |
| கோதுமை | ௪உரு—௦—௦ |
| தங்கம் | ந௬—க௦—௦ |
| வெள்ளி | அ௪—அ—௦ |
| பவுன் விலை | க௬—எ—௬ |

பணம் நிதானம்.

### பள்ளத்தூர். காரைச்சிவனடியார் திருக்கூட்டம்.

இவ்வூர் பெரிநாயகி அம்மனுக்கு நடத்தும் குட்டிவெட்டை முன்னிட்டு நாளிதுமீ க௨-உ. ஞாயிற்றுக்கிழமை தண்ணீர்ப் பந்தருக்கு முன்பாக இரவு ௬-மணி முதல் க௨-மணி வரை ஸ்ரீமான்களான ப. அப. பழனியப்பசெட்டியாரவர்களும், காரைக்குடி சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்களும், கா. கா. அழ. காளையப்பசெட்டியாரவர்களும், பள்ளத்தூர் ராமநாதன் அவர்களும் சொற்பெருக்கிட்டார்கள். கந-உ ஷை தண்ணீர்ப்பந்தருக்கு முன்னர் இரவு க௦-மணி முதல் உ-மணி வரையில் சுமார் க௦௦௦-ஜனங்களுக்கு இடையில் ஸ்ரீமான்களான ராம. ஆவுடையப்பனும் (மாணவன்) பள்ளத்தூர் கூ. சொ. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களும், கோட்டையூர் சி. அழகப்ப செட்டியாரவர்களும், காரைக்குடி ஆவி. லெ. அருணாசலஞ்செட்டியாரவர்களும், முத்து. வெ. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களும், சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்களும், ரெ.சி. விஸ்வநாதசாஸ்திரியார் அவர்களும் மிக அழகாகவும் உருக்கமாகவும் சொற்பெருக்கிட்டார்கள். இவ்வூரில் சுமார் ந,௦௦௦—துண்டுப் பிரசுரங்களும், சுவர் ஒட்டித்தாள்களும் பரப்பப் பெற்றன. இப் பிரசாரத்திற்கு இவ்வூர் வினயகர் சங்கத்தார் பேருதவி செய்தது போற்றத்தக்கது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.



## பலித்வீபம்.

இந்தியாவுக்குத் தென்கிழக்குப் பிரதேசத்திற் பல தீவுகள் இருக்கின்றன. அவை, சுமத்ரா ஜாவா போர்னியோ, செலிபிஸ் முதலிய தீவுகளேயாகும். இவற்றுள் ஜாவா என்று சொல்லப்பெறும் தீவினைப் பற்றிநமது புராணங்கள் பலவிடங்களில்பல சமயங்களில் கூறியிருக்கின்றன. இது யவத்வீபம் என்று அழைக்கப்பட்டிருக்கிறது. இதனைப்பற்றி விரிவாகப் பின்னொருமுறை எழுதுவோம். தற்சமயம் அந்த யவத்வீபத்தின் கிழக்கு பாகத்திலுள்ளதாகிய பலித்வீபத்தைப் பற்றிச் சிறிது எழுதப் புகுவோம்.

இதனைப்பற்றி மாடர்ன் ரெவ்யூ என்னும் பத்திரிகையில் பூஜ்யர் ஆண்ட்ரூஸ் பின்வருமாறு எழுதுகிறார்:—

"அந்தத் தீவிலுள்ளவர்களெல்லோரும் இந்துக்களாகவே இருக்கின்றனர். வெகு காலம் முதலே சுதந்தரமுடையவர்களாகவாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள். அந்தப் பிரதேசங்களிற் படையெடுத்துச் சென்று, பலவிடங்களில் வெற்றி கொண்டு வாழும் மகம்மதியர்களினாலாவது டச்சுக்காரர்களினாலாவது வெல்லப்படாதவர்களாகவே இன்றும் இருக்கின்றார்கள். அங்குள்ளவர்க்கு மாஜ பாஹித இந்துக்கள் என்று பெயர். பெரும் பாகமாகிய யவத்வீபத்துக்கே இந்த மாஜபாஹித இந்துக்களோ மிக்க அழகும் நேர்த்தியும் பலமுமுடையவர்களாகச் சொல்லப்படுகின்றார்கள். யவத்வீபத்து இந்துக்களைக் காட்டிலும் இந்த இந்துக்கள் காத்திரமும் சுகுமாரமும் உடையவர்களாகத் தோன்றுகின்றார்கள். நிறத்தில் மிக்க அழுத்தமில்லாமல் சாதாரணமுள்ளவர்களாகவும் பிரகாசமுள்ள கண்களுடையவர்களாகவும் விளங்குகின்றார்கள். நீண்ட புஜங்களும் ஒடுங்கிய பாதங்களுமுடையவர்கள். ஹிந்துதர்மத்துக் கேற்ற ஜாதி தர்மத்தை இன்னும் காப்பாற்றிக் கொண்டிருக்கின்றார்கள். இந்தத் தற்கால நாகரிகச் சுழற்சியிலுங் கூட, அங்கு ஒரு பிராம்மணப் பெண் மற்றொரு தாழ்ந்தகுல வாலிபனுடன் நேசித்திருக்கக் கண்டார்களாயின், அவர்கள், அவளை ஒரு கோணிப்பையிற் போட்டுத் தைத்துக் கடலில் எறிந்து விடுகின்றார்கள்.

ஆனால், எங்கெங்கே டச்சு அரசாங்கம் ஏறியிருக்கின்றதோ அங்கெல்லாம் வாழும் மேற்குறித்த மாஜபாஹித இந்துக்களிடம் இந்தப் பழக்கமும் உடன்கட்டையேறுதலாகிய ஸதியும் நீக்கப்பட்டிருக்கின்றன. இந்த இந்துக்களே அந்த பலித்வீபத்திலுள்ளவர்கட்குள் மேம்பட்டவர்களாகக் கருதப்படுகின்றார்கள். இந்தப் பலினியர்கள், விசேஷமாக வெளிப்படையில், விரதாதிகளாலும் ஜபாதிகளாலும் இந்துதர்மங்களைக் காப்பாற்றி வருவதால் இந்து பரம்பரையைச் சேர்ந்தவரென்றே சொல்லற்குத் தக்கவர்களாக இருக்கின்றார்கள். அங்கு ஒவ்வொரு கோவிலிலும், அந்தக் கோவிலுக்குப் பின் பாகத்தில், விசேஷித்து உயர்ந்த மேற்கட்டுக் கோப்புகளை மூன்றுக்கு மேல் பன்னிரண்டுவரையிலு முடையதாக ஒரு சிறுவீடு அமைக்கப்பட்டிருக்கிறது. அதற்கு மேரு சிகரம் என்று பெயராம். அதனுள்ளே தான் தெய்வச் சிலைகளும் ரக்ஷகர்களினுடைய உருவங்களும் வைக்கப் பெற்றிருக்கின்றன.

இந்தப் பலினியர்கள் பசுவினிடம் மிக்க மரியாதையும் பக்தியும் காட்டுகின்றார்கள்; மாட்டிறைச்சியைக் கண்டால் மிகவும் பயப்படக் கூடியவர்களாகவும் இருக்கின்றார்கள். ஆனால் இவர்களுக்குள் மலேயா வாசிகளின் ஜீவகாருண்ய மற்றபூஜைகளும் கலந்திருப்பதால் இவர்களைப் பரிசுத்த இந்துக்கள் என்று சொல்வது உயர்வு நவிற்சியாகவும் கொள்ளப் படலாம். இந்தப் பலித்வீபத்தில், இந்துக்களின் மும்மூர்த்திகளும், சக்தியுடன் கூடிய சிவனும் பிரதான தெய்வங்களாகக் கொண்டாடப் படுகின்றார்கள். அந்தத்தீவிலுள்ள உயர்ந்த மலையினுச்சியின் மேல் சிவன் கோவிலிருக்கின்றது. பலூர் ஏரியில் துர்க்கையின் கோவிலிருக்கின்றது; அந்தத்தெய்வத்துக்குதேவி தாமு என்று பெயராம்; ஏரியின் தேவி என்பது அதன் பொருளாம். காளி என்னுந் தெய்வமும் இருக்கின்றது; ஆனால் அதனையவர்கள் கொடுமையும் பயங்கரமுமுடைய பெண்ணுக்குப் பிரதிநிதியாகக் கருதுகின்றார்கள்; எனினும் அதனை முக்யமாய் தேவிஸ்ரீ என்னும் பெயருடன் கன்னித் தெய்வமாகக் கொண்டாடுகின்றார்கள். சீன நாணயங்களிற் பதிப்பிக்கப்பட்ட இந்தத் தேவியின் உருவம் அங்கு எங்கும் நிறைந்து காணப்படுகின்றன.

## அதிசயச் செய்தி.

### ஓர் அதிசயப் பெண்.

அமெரிக்கா ஐயோவா நகரிலுள்ள மிஸ் ஹெவன் என்னும் மாது தன் குதிரையின் மீதேறிச் சவாரி செய்து கொண்டு அமெரிக்கா தேச முழுவதையும் சுற்றி முடித்து விட்டாராம். அதற்கு ஆறரை வருஷங்கள் பிடித்தனவாம். அவர் தனித்தே சென்றதாகவும் தமது செலவுக்காக சென்ற இடங்களில் வேலை செய்து சம்பாதித்ததாகவும், சில நகரங்களில் மூன்று மாதங்கட்கு மேல் தங்கியதாகவும் தம்முடன் தமது குதிரையில் கூடார வசதிச் சாமான்களையும் கொண்டு சென்றதாகவும் தெரிகின்றது.

### அதிசய நாய்கள்.

இங்கிலாந்திலுள்ள பிரசின் என்னுமிடத்தில் ஒரு நாய் தனது எஜமானன் உத்தரவிடும் போது நீரோடைக்குச் சென்று மீன்களைப் பிடித்து அவற்றைக் கொல்லாமல் வீட்டுக்குக் கொண்டு வந்து கொடுக்கின்றது.

பிட்வெல் என்னுமிடத்தில் ஒரு நாய் வெகு திறமையுடன் காற்பந்து விளையாடுகின்றது. மற்றொரு நாய் குத்துச் சண்டை போடக் கற்றிருக்கின்றது.

டேவர்ட்ரீ என்னுமிடத்தில் ரோவர் என்னும் நாய் காலை ரு-மணிக்குத் தனது எஜமானனை யெழுப்பி, அவனது உத்தரவிற்காகக் காத்திருக்கின்றது. அவனது உத்தரவின்படி நூற்றுக்கு மேலான செம்மறியாடுகளை ஒரு மைலுக்கப்பாலுள்ள நிலத்திற் கொண்டு போய் மேயவிடுகின்றது. மற்றொரு நிலத்திலிருந்து பால்கறப்பதற்காகப் பசுக்களை யோட்டிக் கொண்டு வருகின்றது. கடிவாளம் போட வேண்டிய குதிரைகளை எஜமானன் உத்தரவுப்படி கொண்டு வந்து சேர்க்கின்றது. சாயங்காலத்தில் ஆடுகளை வீட்டுக்கு ஓட்டிக்கொண்டு போகிறது. அவைகளில்ஏதேனுமொன்று வாராதிருந்தால், எஜமானன் அதன் பெயரைச் சொல்லியதனைக்காணோமென்று சொல்வான். உடனே அந்நாய் ஓடிக் காணமற்போன ஆட்டைத் தேடிப் பிடித்துக் கொண்டு வருகின்றது.

## இலங்கைக் கடிதம்,
(நமது நிருபரிடமிருந்து)

### புத்தர்பெருமான் பிறந்த தினம்.

இயற்கை யமைப்பிலேயே இந்திரலோகம் போன்ற இவ்விலங்காபுரித் தலைநகரமாகக் கொண்ட, கண்டவர் காமுறும் காமதேனுவின் பட்டணமாகிய இக்கொழும்பு மாநகரில், புத்தர் பெருமான் பிறந்த தினத்தை கஅ, கக-ந் தெய்திகளில் வெகு ஆடம்பரத்துடன் கொண்டாடினார்கள். வீதிகள் தோறும் மகர தோரணங்களாலும், கொடிகளாலும் நிறையப்பெற்று ஆயிரக் கணக்கான தீபங்கள் அதை யலங்கரித்து நிற்க, சந்திரனும் தன்னொளி பரப்ப, பார்ப்பவர் மனதைப் பரவசத்தில் மூழ்கச் செய்தது. பல கிருகங்களில் மனதைக் கவரத் தக்க பாடல்கள் மக்கள் மனத்திற்கு மகிழ்ச்சியை யூட்டின. கூட்டத்திற்கோ கங்கு கரையில்லை. வெளியூர்களிலிருந்து வந்த ஜனங்களின் சிறப்பு செப்புந் தரமன்று. இவையெல்லாவற்றையும் விட ஈங்கு ஓர் விசேஷ சம்பவம் குறிப்பிடற்பாலது. அதாவது, ஒவ்வொரு தெருவிலும் அழகான பந்தல்களமைத்துத்தாக விடாயையும், பசிப்பிணியையும் தணித்துக் கொள்வதற்காக ஆங்குப் பலவகையான பானங்களும், பலகாரங்களும் பரிமாறப்பட்டன. எவர் உட்சென்றாலும் அவரை அன்போடு அமரச் செய்து, அவர்களுக்காகவேண்டியவைகளை அகங்குளிர்ந்து அளித்து வந்தார்கள். ஒவ்வொரு பந்தல் முகப்பிலும் அமைத்திருந்த புத்தர் பெருமான் உருவமைந்த படமானது பார்ப்பவர் மனதில் பக்தியை யூட்டியது. விசேஷ நாட்களில் வீணன விஷயங்களில் அநியாயமாய்ப்பணத்தை அள்ளி இறைக்கும் மதஸ்தர்கள், இத்தகைய நல்ல கிருத்தியங்களில் நாட்டத்தைச் செலுத்துவார்களா?

### புலியால் மாண்டான்.

திரிகோண மலையிலிருந்து மட்டக் களப்புக்குப்போகும் வழியில், புகையிலை வியாபாரம் செய்யும் மகமதியரொருவர், தனது வயலில் உழுது விட்டுக் காளைகளை ஒரு பக்கத்தில் கட்டி அப்புறஞ் சென்றார். மூர்க்காவேசம் கொண்ட புலியொன்று காளைகளைத் தாக்க, காளைகள் கத்த ஆரம்பித்தன. சத்தத்தைக் கேட்ட மகம்மதியர் காளைகளின்ண்டையில்வர, புலி காளையை விடுத்து மனிதனைத்தாவிக்கொன்றுவிட்டது.

### தீர்ப்பான முடிவு.

ஸ்ரீமான் சஸ். பி. சார்லஸ்ஸினுடைய ஆக்ஷேப விசாரணை இம்மதி உ0-ந் தெய்தி ஆவான்வெலே கச்சேரியில் முடிவெய்தியது. ஆக்ஷேபம் அத்தனைக்கும் அரும்பதில்கள் கூறப்பட்டன; மேலும், இந்தியாவிற் பிறந்ததாகவும் அநேக ஆதாரங்கள் காட்டப்பட்டன. எனவே, அபேட்சகரின் ஸ்தானத்திற்கு அவரது நாமத்தையும் பதிவு செய்யப்பட்டதாகத் தெரிவித்திருக்கின்றனர்.

### ஆனந்தா வாரம்.

சென்ற வாரம் ஆனந்தா வாரமாகக் குறிப்பிட்டு ஆனந்தக் கல்லூரியிலுள்ள பையன்கள் கொடிகளையும் பதக்கங்களையும் தெருத்தெருவாய்க் கொண்டு போய், வழியில் போகிற வருகிறவர்களெல்லோரிடமும் விற்று நல்ல பணம் சேர்த்து விட்டார்கள். இப்பணம் ஆனந்தக்கல்லூரியின் அபிவிருத்திக்கும், தேசாபாஷையின் செழுமைக்கும் செலவழிக்கப்படுமாம்.

## பத்து லெக்ஷ்ம்

ரூபாய்வரை எந்தத் தொகைக்கும் எந்தச் செல்வானமுள்ள தொகைக்கும் மிகவிரைவில் மிகச்சுலபமாக வட்டி பார்க்கவும் வட்டிச்சிட்டை தயாரிக்கவும் சரிபார்க்கவும் புதியமாதிரியில் வட்டிப் பிரகாசிகை, யென்ற புஸ்தகம் கணித்திருக்கிறது. இதில் நாள் க-முதல் ந உ-வரைக்கும் மாதாசிகாலணா முதல் கஉ-ரூபாய் வரை வட்டி வீதப்படி வட்டி—சரிநாள் வட்டி தவணை வட்டி பாங்கி வட்டி அசல் ரெட்டிப்புச் சம்பளம் முதலியவைகளையும் எளிதில் பார்த்துக்கொள்ளலாம். கணித நிபுணர்களால் நன்கு பரிசோதிக்கப் பெற்றிருக்கின்றது. கால் பைசா கூட வட்டிவிடாது பிரபல லேவாதேவிக்காரர்களான கனம் ஸர் அண்ணாமலை செட்டியாரவர்கள் ராவ் பகதூர் சோமசுந்தரம் செட்டியாரவர்கள் முதலிய தவைசியப் பிரமுகர்களாலும் இராமநாதபுரம் ஜில்லா கலெக்டரவர்களான முதலியகவர்ன்மெண்டியோர்தர உத்யோகஸ்தர்களாலும் நற்சாக்ஷிப்பத்திரங்கள் பெற்றிருக்கின்றது. விலை ரூ. ந.

நா. சு. லெக்ஷ்மணய்யர்,
வெள்ளையனூருணி, தேவகோட்டை.







## மதிப்புரை.

### முருகவேள் பனுவல்திரட்டு.

இது ஒரு அருமையான—அவசியம் வேண்டிய புஸ்தகம். இதன் பெயரே இதனுள் அடங்கிக் கிடக்கும் விஷயப் பெருமையை யடக்கி நிற்கின்றது. கலியுக வரதராகிய முருகப்பெருமான் பேரில் தலையன்பு கொண்ட பெரியார் பலர் பணித்துள்ள பாடல் பலவற்றிலிருந்து தொகுக்கப்பெற்ற நூல் என்பது இதன் பொருள். இதனைத் திரட்டிய பெரியார், சென்னை இராயப் பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜனஸபைத்தலைவரும் சைவப் பிரசாரகருமாகிய திரு. வ. உலகநாத முதலியார் ஆவர். இப்பெரியாரது பெயர் விலாசமே நேயர்கட்கு இவர் பால் பேரன்பை விளைவிப்ப தொன்றாகும். இவ்விலாசம் தேசபக்த சிங்கமாகிய—உண்மையாளராகிய—சாந்த நிதியாகிய தென்னாட்டிற் பிரசித்தி பெற்ற நவசக்தித் திருவிப் பெரியாரின் பெயரையும் உருவையும் குணனையும் நலனையும் நமக்குக்காட்டி நிற்கின்றதன்றோ? இத்தகைச் சகோதரர்கள் இறங்கி நடத்தும் எத்துறையும் தள்ளப்படாது கொள்ளத்தக்கதேயாகும். அதிலும், யாரும் விரும்பும் எம்பெருமான் அறுமுகக் கடவுள் பேரில் பத்திச்சுவை சொட்டச்சொட்டப் பாடியுள்ள பனுவல்களிலிருந்து, ஒரு அரிய பக்தர்—சாந்த சீலர்—பரம்பரைத் தொண்டர் தொகுத்திருக்கின்றாரென்றால், அத்தொகுப்பின் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ? இத்தொகுப்பின் பெயரை,—தொகுத்தோர் பெயரைக் கேட்டவன்றே சைவர்—வைணவர், உயர்ந்தோர்—தாழ்ந்தோர்—தனிகர், தரித்திரர், பாடகர்—பண்டிதர்—யாரும் பேதமில்லாமல் வருவித்துப் படித்துப் பயன்பெறுதல் அவசியத்தினும் அவசியமாகும். இத்தொகுப்பின் இப்போதைய பதிப்பு நேயர்களால் ஆதரிக்கப் படுமானால், இரண்டாம் பதிப்பில் இன்னும் எஞ்சியுள்ள பனுவல்களிலிருந்தும் பழம் பாடல்கள் தொகுக்கப்பெறும் என்று அப்பெரியார் குறித்துள்ளார்கள். இத்தொகுப்பைப்பெறின், அறுமுகனைப் பற்றிச்சொல்லும் அத்தனை நூல்களின் சாரத்தையும் நாம் பெற்றவராவோம் என்பதிற் றடையேயில்லை. "முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை". என எழுதிப் பெறலாம்.

இதன் விலை ரூ. க—0—0.

### கூழிபிறைச் சிவனடியார் திருக் கூட்டத்தாரின் பிரசாரம்.

"நச்சாந்துபட்டி" இவ்வூருக்கு அருகாமையிலுள்ள கோட்டூர் சுந்தரநாயகி அம்மன்கோவிலில் நாளிதுக சஉ நடைபெறவிருந்த குட்டிவெட்டுப்பொங்கலை முன்னிட்டு இத் திருக்கூட்டத்தின் அங்கத்தினர்கள் நாளிது ககஉ நச்சாந்துபட்டிக்குச் சென்று சாயங்காலம் ஊர்முழுமையும் ஜீவகாருண்ய பஜனைகள் செய்து முடிந்ததும் இரவு கூ-மணிக்கு கலைமகள் வாசகசாலைக்கு முன்பாக மாணவன் சி. மு. சுப். குழந்தையனும் மது. கரு. ராம. சொக்கலிங்கமும் கொலைமறுத்தல் என்னும் விஷயத்தைப் பற்றி விரிவாக சொற்பெருக்கிட்டார்கள். ஏராளமான துண்டுப்பிரசுரங்களும் வழங்கப்பெற்றன.

ச. கரு. நாகப்பசெட்டியார்






விளம்பரம்.

மாதம்ஒன்றுக்குப் பத்தி க-க்கு ரூ. உ0.
ஷை பத்தி அரைக்கு ரூ. கக.
ஷை கால் பத்திக்கு ரூ. கூ.
ஷை அங்குலம் ஒன்றுக்கு ரூ. உ.

மூன்று மாதங்கள் விளம்பரஞ் செய்வோர்க்கு மாதம் ஒன்றுக்கு பத்தி ஒன்றுக்கு ரூ. கஎ-ஆகவும் அரைப்பத்திக்கு ரூ. கூ-ஆகவும், கால்பத்திக்கு ரூ. டு-ஆகவும் போடப்படும்.

ஆறு மாதங்களும் அதற்கதிகமாகவும் விளம்பரஞ் செய்வோர்க்கு மாதம் ஒன்றுக்கு பத்தி க-க்கு ரூ. கடு-வீதமும் அரைப் பத்திக்கு ரூ. அ-வீதமும், கால் பத்திக்கு ரூ. ச-வீதமும் போடப்படும்.

ஒருபக்கம் விளம்பரஞ் செய்ய க-மாதத்திற்கு ரூ. [illegible].
ஷை ஒரு வாரத்திற்கு ரூ. [illegible].

காரியஸ்தர்,
"தனவைசிய ஊழியன்" ஆபீஸ்,
காரைக்குடி.

தனவைசிய ஊழியன் சந்தா விபரம்.

உள்நாட்டிற்கு வருஷ சந்தா ரூ. [illegible]
வெளி நாட்டிற்கு ஷை க—0—0 தனிப்பிரதி க-க்கு 0—உ—0

காரியஸ்தர்,
தனவைசிய ஊழியன் காரியாலயம், காரைக்குடி.

## விளம்பரம்.

இராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா மகிபாலன்பட்டியிலிருக்கும் ஏ. மு. ப. நடேசஞ்செட்டியாராகிய ஏகப்பசெட்டியார் சகலமான பேர்களுக்கும் தெரிவித்துக்கொள்வது யாதெனில் மலாய்ஸ்டேட் ஈப்போவில் பசா. முசு. விலாசமுள்ள கடையில் எனக்கும் எனது குமாரன் (மைனர்) முத்துப்பழனியப்ப செட்டியாருக்கும் பாத்தியம் உள்ள ஆறில் ஒரு பாகத்தை மகிபாலன்பட்டி சி. சா. சாத்தப்பசெட்டியாருக்கு நாளிது கக உச-ஆ மார்ச்-மீ கஉ-வுக்கு ருத்ரோத்காரி-ஆ பங்குனி-மீ க-உயில் கிரயம் எழுதி ரிஜிஸ்ட்டர்செய்து கொடுத்திருப்பதால் மேற்படி கடையில் எனக்கும் (மைனர்) முத்துப்பழனியப்ப செட்டியாருக்கும் யாதொரு விதமான பாத்தியமும் பின் தயர்ச்சியு மில்லையென்பதை யிதன் மூலம் தெரிவித்திருக்கிறேன்.

ஏ. முப. நடேசன் செட்டியாராகிய
ஏகப்பசெட்டியார்

---

## தபால் தந்திமித்திரன்.

மூன்றாம்பதிப்பு அச்சில் தயாராகிக் கொண்டிருக்கிறது. கூடியசீக்கிரம் வெளிவரும்.

முதல்இரண்டாம்பதிப்பைப்பார்க்கிலும் அநேக விஷயங்கள் புதிதாய்ச் சேர்க்கப்பட்டிருக்கிறதுமன்றி ருத்ரோத்காரி வருடம் வரை தவணைவட்டி கடப்புவட்டிகளும் சேர்க்கப் பட்டிருக்கின்றன. வர்த்தகர்களுக்கு இப்புத்தகம் அவசியம் வேண்டற்பாலது. சொற்ப பிரதிகளே தயாராகிக்கொண்டிருக்கிறபடியால் வேண்டுவோர் முன்னதாகவே ஆர்டர் அனுப்பி வைக்கும்படி செய்ய வேண்டியது.

இதன் விலை ரூ உ-0-0
வி. பி. சார்ஜ்பிரத்தியேகம்

வைசியநேசன்

தபால் பெட்டிநேர் உ௯க
இரங்கோன்.

எங்களிடம் நயம்மரியாப்புழுங்கலரிசிச்சரிசி துவரம்பருப்பு உழுந்தப்பருப்ப கடலைப் பருப்புகளும் சாதகமானவிலைக்குக் கிடைக்கும்.

---

“ரக்தாட்சி ஆண்டு”
தனவைசிய ஊழியன் தினசரி.

விலை ரூ க—0—0
தபாற்கூலி வேறு.

சொற்பப் பிரதிகளே
மீத மிருக்கின்றன

காரியஸ்தர்
தனவைசிய ஊழியன் அச்சுக்கூடம்
காரைக்குடி.

---



ராய். சொக்கலிங்கனால் காரைக்குடி தனவைசியஊழியன் அச்சியந்திரசாலையில்
அச்சியற்றிப்பிரசுரஞ்செய்யப் பெற்றது.

